# வசிட்டர்

# சொன்ன

# அறிவுரைகள்

## ஆரார்

அறிவரங்கம்

திருப்புத்தூர் (ஆர்) - 623 211.

**Vasittar Sonna Arivuraigal**

Aaraar

*First Edition - July 1988.*

**Arivarangam**
Anna Nagar, Madurai Road,
TIRUPPATTUR (R) – 623 211.

**Thiruppathi Printers**
19, Koodal Alagar Perumal Kovil Street,
MADURAI - 625 001.

PAGES : 60

Rs. 6/-

## படையல்

''பூரண ஞானம் பொலிந்த நன்னாடு,' என்ற பெருமை இந் நாட்டுக்குச் சென்ற காலத்தில் மட்டுமின்றி எக் காலத்துக்கும் உரியது என இக்காலத்து நிலைநாட்டிய அருளாளர் பலர்.

அவருள், 'தானே முழுதுணரும்' வாய்ப்பை மிக இள மையில் பெற்றவர், அதன்பின் ஐம்பது ஆண்டுகள் அண்மையிலிருந்தும், கடல் கடந்தும் அறிவுப் பசியோடு வந்தோர்க்குத் தனது முகன் அமர்ந்த இனிய பார்வை யாலும், அகன் அமர்ந்த தெளிந்த உரையாலும் அருள் அமுது ஊட்டிய வள்ளல், சாத்திர உண்மைகளின் உருவ மாக வாழ்ந்தவர், பெருந்தகையாளர் இரமணர் என்ற மாதேவர்க்கு.

## நூல்

சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமன் இன்ப துன்பம், நன்மை தீமை, தோற்றம் மறைவு என்ற சுழற்சிகளிலிருந்து விடுபட அருள் ஆசானாகிய வசிட்டர் உரைத்த பாங்கில் இருப்பது ஞானவாசிட்டம் அல்லது யோகவாசிட்டம். கதைகளின் வடிவில் அமைந்துள்ளது அது. கனிச்சாறு போன்று அதன் பிழிவாக இருப்பது ஞானவாசிட்ட சாரம். அதனை ஓதுவார்க்கு மன அமைதி கிட்டும். ஆழ்ந்து சிந்திப்பார்க்கு ஆன்ம விழிப்பு ஏற்படும். கடைப்பிடிக்க வல்லார்க்குப் பேரின்பம் வாய்க்கும். இதனைத் தமிழில் தரப் பயன்பட்டவற்றுள் தலையாயது இரமணாசிரமம் வெளியிட்டிருக்கும் யோக வாசிட்ட சார ஆங்கிலப் பதிப்பாகும்.

## நன்றி

பெருகிவரும் அமுத ஊற்றைத் தன்னுள் அடக்கிய இக் குறுஞ் சுவடியைத் திருத்தியும், பல பகுதிகளைத் தானே எழுதியும் தந்த எம் ஆசான் 'அண்ணாச்சி' காரைக்குடி ராம நடராச பிள்ளை அவர்களுக்கு.

## அதிகாரம் ஒன்று

# எது ஞானத் தேட்டம்?

ஒன்று

அமைதியான சோதிக்கு
எனது வணக்கங்கள்.
அது எல்லையற்றது; காலம் இடம் என்ற
கட்டுகள் அற்றது; தூய உணர்வு மயமானது.
அதை அனுபவித்துத் தான் உணர முடியும்.

இரண்டு

சத்தியத்தை அறிந்தவனுக்கும்
முழுதும் அறியாமையில் ஆழ்ந்திருப்பவனுக்கும்
இந் நூல் உரியதன்று.
'நான் பந்த முற்றவன், எனக்கு விடுதலை வேண்டும்'
என்று எவன் எண்ணுகிருனே
அவனுக்கே இந்நூல் உரியது.

மூன்று

இறைவனுடைய அருளை உறுதியாகப் பெற்ருலன்றி
ஒருவனுக்கு
ஏற்ற குருவோ சரியான சாத்திரமோ கிடைப்பதில்லை.

நான்கு

இராமா,
கைதேர்ந்த படகுக்காரனின் சேவையைக் கொண்டு
அலைக்கழிக்காத படகுப் பயணத்தைப் பெறுவது போல
மகாத்மாக்களின் கூட்டுறவால்
பிறவிப் பெருங்கடலைக் கடக்கும்
வழிமுறையை அறிந்து கொள்ள முடியும்.

ஐந்து

நான் யார்?
யாருக்கு இந்தப் பிறப்பிறப்பு உரியன?
என்னும் ஆன்ம விசாரமே
பிறவிப் பெரும்பிணியைத் தீர்க்க வல்ல
அரு மருந்து.

ஆறு

இனிய கனியும் குளிர் நிழலும் தரும்
மரத்துக்கு ஒப்பாவார் ஆன்ம ஞானி.
அத்தகைய ஞானி இல்லாத இடத்தில்
ஒரு நாட் பொழுதையும் கழிக்கக் கூடாது.

ஏழு

ஞானிகள் யாதும் உபதேசம் செய்யாவிட்டாலும்
அவர்களை அணுகி யிருப்பது நல்லது.
அவர்களுடைய விளையாட்டுப் பேச்சிலும்
மெய்யறிவு பொதிந்திருக்கும்.

எட்டு

ஞானிகளின் கூட்டுறவு
வெறுமையைப் போக்கி நிறைவைக் கொணரும்;
இறப்பைப் போக்கி இறவா நிலை தரும்;
வறுமையைப் போக்கி வளப்பம் நல்கும்.

ஒன்பது

ஞானிகள் தங்களுடைய
சுகத்தைப் பற்றி மாத்திரம்
கவனித்துக் கொண்டிருந்தார்கள் என்றால்
பிறவித் துன்பங்களால் வேதனைப் படுவோர்
பின் யாரிடம் சென்று புகலடைவார்கள்?

பத்து

சான்றோனே,
காமம் வெகுளி மயக்க மறுத்தவனைத்
தகுதியை அடைந்த சீடனுக்கு
உபதேசிப்பதே ஞானம் எனப்படும்;
தெய்விக நூல்களின் நோக்கமும் அதுதான்;
அதுவே முழுமையான மெய்யறிவும் ஆகும்.

பதினொன்று

பழமரபினின்றும் வழுவா திருப்பதற்காகவே
வழக்கமான முறையைப் பின்பற்றி
உபதேசம் செய்யப்படுகிறது;
எனினும் சீடனின் தெளிவைப் பொறுத்தே
அவனுக்கு விழுமிய மெய்யுணர்வு புலப்படும்.

பன்னிரண்டு

சாத்திரங்களின் உதவியாலோ
குருவின் உதவியாலோ (மட்டும்)
இறைவனைக் காண முடியாது;
தூய நுண்ணறிவின் உதவியால் தான்
ஆன்மா ஆன்மாவைக் காண்கிறது.

பதின்மூன்று

கலைஞர்கள், தங்கள் பயிற்சியை நிறுத்தி விட்டால்
தத்தம் கலைகளை இழந்து விடுகிறார்கள்.
ஆனால் ஞானத் தேட்டமோ வெனில்
முளை கிளம்பி விட்டால் திடமாக மேன்மேலும் வளர்கிறது.

பதினான்கு

கழுத்தில் அணிந்திருக்கும் ஆரத்தை
மறதி காரணமாகக் காணமற் போயிற்றென்று கருதிப்

பிறகு தன் தவற்றை உணர்ந்து
பின் அதனை அடைந்து விடுதல் போல
ஒருவன் தன் குருவின் உரைகளால்
மயக்க மறுத்துத் தன்னை அடைகிருன்.

பதினைந்து

தன்னை அறியாது
சுவை ஒளி ஊறு ஓசை நாற்றப் பொருள்களில் மட்டும்
இன்பம் நுகர்வோன்
துர்ப்பாக்கியசாலி ஆவான்.
தான் உண்ட உணவு நஞ்சு கலந்த தென்பதை
உண்ட நெடுநேரங்கழித்து உணர்பவனைப்
போல்வான் அவன்.

பதினாறு

உலகிற் காணப்படும் பொருள்கள்
தன்னை ஏமாற்றி மயக்கத்தை உண்டு பண்ணுகின்றன.
என அறிந்திருந்தும்
மீண்டும் அவற்றையே நாடுபவன்
மனிதனல்லன் ; கழுதையாவான்.

பதினேழு

மிகமிகச் சிறிய எண்ணமும்
மனிதனைத்துயரத்தில் அமிழ்த்துகிறது;
எல்லா எண்ணங்களும் அற்ற நிலையில்
மனிதன் அழிவற்ற ஆனந்தம் அனுபவிக்கிருன்.

பதினெட்டு

ஒரு மணி நேரக் கனவில் நாம் ஒரு நூறு ஆண்டுகளைக்
கழிப்பது போன்று தோன்றுகிறது.
நமது விழிப்பு நிலையிலும் அவ்வாறே
மாயையின் விளையாட்டில் சிக்குண்டிருக்கிருேம்.

பத்தொன்பது

எவன் ஒருவனுடைய மனம் அமைதியுற்றிருக்கிறதோ
விருப்பு வெறுப்பற்று இருக்கிறதோ
எவன் இவ்வுலகை வெறும் பார்வையாளன் போல்
மதிக்கிருனோ
அவன் மகிழ்ச்சியோ டிருப்பான்.

இருபது

வேண்டுதல் வேண்டாமை என்னும்
இருவகை முனைப்புகளையும் எப்படிக் களைவதென்பதை
எவன் நன்கு அறிந்துள்ளானோ,
எவன் தனது அந்தரங்கத்தில் இருக்கும் உணர்வை
அறிந்துள்ளானோ,
அவனுடைய வாழ்வு புகழ்படைத்தாகும்.

இருபத்தொன்று

உடல் அழியும் போது
ஆன்மா அழிந்து போனதாக எண்ணி
மனிதர்கள் தேவையில்லாமல் வருந்துகிருர்கள்;
இருதயத்திஞல் கட்டுப்படுத்தப்பட்ட
ஆகாயம் முடிவுபெறுகிறதே யொழிய
வேருென்றுமில்லை.

இருபத்திரண்டு

குடங்கள் உடைந்தால் அவற்றினுள் இருக்கும்
ஆகாசம் எல்லையற்ற ஆகாசமாகிறது;
அதுபோல
உடல்கள் அழிந்தால்
ஆன்மா நித்தியமாகச் சார்பற்று நிற்கிறது.

இருபத்துமூன்று

எக்காலத்திலும் எங்கும் எதுவும்
பிறப்பது மில்லை, இறப்பது மில்லை.
பிரம்மம் ஒன்றே
உலகு என்ற மாயையாக நமக்குத் தோற்ற மளிக்கிறது.

இருபத்து நான்கு

ஆன்மா,
நாம் காணும் வெட்ட வெளியினும் பரந்தது,
அது பரவெளி;
அது தூயது, நுண்ணிது, அழிவற்றது, நன்மை அளிப்பது.
இத்தகைய பொருள்
எப்படிப் பிறக்கக் கூடும்? இறக்கக் கூடும்?

இருபத்தைந்து

அது (ஆன்மா) சாந்தமயமானது,
முதல் நடு இறுதியற்றது.
அது உள்ளதென்றோ இல்லதென்றோ கூறமுடியாது.
இதனை அறிந்துகொண்டு மகிழ்ச்சியாக இரு.

இருபத்தாறு

இராமா,
அறியாமையில் அமிழ்ந்து வாழும் வாழ்வைக் காட்டிலும்
கையில் மண் சட்டி ஏந்தியவனாய்த் தாழ்ந்தோரின் தெருவில்
பிச்சை எடுத்து அலைவது
எவ்வளவோ மேலானதாகும்.

இருபத்தேழு

இவ்வுலகில் நோய், நஞ்சு, வறுமை போன்ற எதுவும்,
உடம்பிடைப் பிறந்த
மடமையைப் போன்று
மனிதனுக்குத் துன்பம் தருவது கிடையாது.

## அதிகாரம் இரண்டு

# உலகின் உண்மை நிலை என்ன?

ஒன்று

திருப்பாற் கடலைக் கடைந்த காலத்தில் மகேந்திர மலை
அசைவற்று நிலையாக நின்ற போது
அக்கடல் அலைகளின்றி அமைதியாக இருந்தது.
அது போல,
மனமும் தன்பால் ஓட்டங்கள் நீங்கி அமைதியுறுமாகில்
உலக பந்தம் என்ற மாயையும் மாயும்.

இரண்டு

மனம் இயங்குகையில் உலக பந்தம் ஏற்படுகிறது ;
மனம் இயங்காமல் அமைதியுறுகையில்
உலக பந்தம் நின்றுவிடுகிறது.
மூச்சை அடக்குவதன் மூலமாகவும்
உள்ளடங்கிய ஆசைகளை அடக்குவதன் வாயிலாகவும்
மனத்தை அமைதிப் படுத்துவாயாக.

மூன்று

பயனிலா உலக பந்தம்
வெறும் கற்பனையில் பிறக்கிறது ;
கற்பனை மறைந்தால் அதுவும் மறைகிறது.
உலக பந்தம் முழுவதும் பொய் என்பது உறுதி.

நான்கு

நாகத்தின் சித்திரத்தை ஒருவன் காண்கிறான்
அது சித்திரம் என்பது உறுதிப் படும் பொழுது
அவன் மனத்தில்
அது உயிருள்ள நாகம் என்ற எண்ணம் தலையெடுக்காது.

அதே போன்று
கண்களுக்குத் தென்பட்டுக் கொண்டிருந்தாலும்
ஞானம் உதிக்கும் பொழுது
உலக பந்தம் நீங்கி விடுகிறது.

ஐந்து

நெடிது நின்று துன்புறுத்தும் பேய் போன்றது
உலக பந்தம். அது
மயக்கத்துக் குள்ளான மனத்தின் படைப்பாகும்;
இன்னல்களுக்கும் அதுவே காரணம்.
அது பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்தால் அந்த
உலக பந்தம் மறைந்து விடுகிறது.

ஆறு

இராமா,
மாயை தன்னைத் அழித்துக் கொள்ளும் பொழுது
மகிழ்ச்சியைத் தருகிறது;
இதுவே அதன் தன்மை.
அதனுடைய இயல்புகள் அனைத்தையும் அறிய முடியாது.
அதைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கையில்
அது தன் இருப்பு அழிந்து விடுகிறது.

ஏழு

அருமந்த இளையோய்,
உலகோர் அனைவரையும் மயங்க வைக்கின்ற
இந்த மாயை
உண்மையிலே ஆச்சரியமானது.
ஆன்மா நமது உடல் முழுதும்
ஊடுருவிப் பரந்திருந்துங் கூட
மாயையின் ஆற்றல் காரணமாக
நாம் அதை (ஆன்மாவை)க் காண முடிவதில்லை.

எட்டு

நாம் பார்ப்பது அனைத்தும்
உண்மையில் இல்லாதது;
கந்தர்வர்களின் மாயா நகரம் போன்றது;
கானல் நீர் போன்றது.

ஒன்பது

நமக்கு உள்ளே யிருந்தும்
எது நமக்கு வெளிப்படையாகப் புலனாகாதிருக்கிறதோ,
அதுவே,
நித்தியமான — அழிக்க வொண்ணா-
ஆன்மா எனப்படுகிறது.

பத்து

குளக்கரையில் இருக்கின்ற மரங்களின் நிழல்
குளத்து நீரில் தோன்றுகின்றது.
பல வேறு வகைப் பொருள்களும்
உணர்வு வடிவமான நமது ஆன்மப் பெரும் பரப்பாகிய
கண்ணாடியில்
நிழல்களாகத் தோன்றுகின்றன.

பதினொன்று

நாம் காணும் இந்தப் படைப்பு
ஆன்மாவாகிய உணர்வின் ஒரு விளையாட்டு ஆகும்.
நாம் அறியாமையில் மூழ்கி யிருக்கும் போது
பாம்பாகத் தோற்றம் அளிக்கும் கயிறு போல்வது அது.
மெய்யறிவு உதிக்கும் பொழுது
அது அழிந்து விடுகிறது.

பன்னிரண்டு

உண்மையில்
பந்தம் என்பது கிடையாது. எனினும்,
இன்பப் பொருள்களின் மீது ஆசை ஏற்படும் போது
அது வலுவடைகிறது.
இந்த ஆசை குறையும் போது
பந்தம் வலுக் குறைகிறது,

பதின் மூன்று

கடலிலிருந்து அலைகள் கிளம்புவதைப்போல
நிலைபேறுள்ளதும் பெரும் பரப்புடையதுமான
பரம் பொருளாம் ஆன்மாவிலிருந்தே
நிலையற்ற மனம் கிளம்புகிறது.

பதினான்கு

மனமானது, தன்னிச்சையாகவே
திடீர் திடீரென்று
எவ்விதக் கட்டுப்பாடும் இன்றி
எல்லாவற்றையும் கற்பனை செய்கிறது.
நாம் விழிப்பு நிலையில் இருக்கும் போது
இந்த மாய உலகமும் அதே பாங்கில்
அதனால் தோற்றுவிக்கப் படுகிறது.

பதினைந்து

இந்த உலகு இல்பொருள்.
எனினும், இருப்பது போலக் காணப்படுகிறது.
இல்பொருளாகிய பிசாசு
எவ்வாறு ஒரு சிறுவனை அச்சுறுத்துகிறதோ அவ்வாறு
இல்பொருளாகிய இவ்வுலகம்
அறியாமையில் கிடந்து தத்தளிக்கும் மனிதனுக்கு
வாழ்நாள் முழுதும் தொலையாத துன்பத்தைத் தருகிறது.

பதினாறு

பொன் என்றால் என்னவென்று தெரியாதவன்
வளையலை மாத்திரம் பார்க்கிறான்.
அது வெறும் பொன்னே என்ற எண்ணம்
அவனுக்குத் தோன்றுவதில்லை.

பதினேழு

அதே போன்று
நகரங்கள் வீடுகள் மலைகள் பாம்புகள் போன்றவை,
அறியாமைக் குள்ளானவன் கண்ணுக்குத்
தனித்தனிப் பொருள்களாகக் காட்சி அளிக்கின்றன.
இருக்கும் பொருள் ஒன்றே என்று
தெள்ளத் தெளிந்தார்க்குக்
காணப்படும் உலகமும் காண்பானும் வெவ்வேறு அல்ல;
ஒன்றே ஆகும்.
உலகம் ஆன்மாவினின்றும் வேறுபட்ட தன்று.

பதினெட்டு

அறியாமை வயப்பட்டவனுக்கு இந்த வுலகம்
துன்பம் நிறைந்ததாகவும்
ஞானிக்கு ஆனந்தமயமாகவும்
இருக்கிறது;
குருடனுக்கு இருட்டாகவும்
கண்தெரிந்தவனுக்கு ஒளியாகவும்
இருக்கிறது இவ்வுலகம்.

பத்தொன்பது

எது உள்ளது எது இல்லாதது என்பதைத் தெளிந்து,
உலக பந்தங்களை உதறித் தள்ளி
மனத்தின் கற்பிதங்களை
ஒதுக்கியவனுக்கு
இன்பம் இடையறாது மிகும்.

இருபது

தெளிவாக இருக்கிற வான வெளியில்
திடீரென்று தோன்றி திடீரென்று மறைந்து விடுகிற
மேகங்களைப் போன்று
ஆன்மாவின்கண் பிரபஞ்ச முழுவதும் தோன்றி மறைகிறது.

இருபத்தொன்று

சூரியன் வேறு அவனுடைய கதிர்கள் வேறு
என்று எண்ணுமல்
கதிர்களும் சூரியனே என்று உணருகிறவன்
பேதங் கடந்தவன் எனப்படுகிருன்.

இருபத்திரண்டு

ஆராயும் போது
துணி, நூலினின்றும் வேறுபடாதது போல
ஆழ்ந்து சிந்திக்கும் போது
இந்த உலகமும் ஆன்மாவினின்று வேறுபடாததாத உள்ளது.

இருபத்து மூன்று

அமுதக் கடலாகிய ஆன்ம உணர்வினின்றும்
ஓர் அலை போல
கவர்ச்சியுள்ள இந்த வுலகம் எழுகிறது. அதிலே
கரைந்து விடுகிறது.
அவ்வாறிருக்கையில் இடைநடுவே காணப்படும்
இந்த உலகம்
எப்படி அதனின்றும் வேறுபட்டதாக இருக்கக் கூடும்?

இருபத்து நான்கு

அலைகள், நுரை, பனி, குமிழிகள், யாவும்
நீரினின்றும் வேருனவை அல்ல;
அவ்வாறே
இவ் வுலகமும் ஆன்மாவினின்று வெளிக்கிளம்பியதால்
அதனின்றும் வேறுபட்டது அன்று.

இருபத்தைந்து

பழங்கள் இலைகள் கொடிகள் மலர்கள்
குச்சிகள் வேர்கள் என்ற இவை யாவும்
மரத்தின் விதைக்குள் அடங்கி யிருப்பதைப் போல
இங்கு வெளிப்பட்டுத் தோன்றும் உலகமும்
பிரம்மத்தில் அடங்கி யிருக்கிறது.

இருபத்தாறு

மண்சட்டி இறுதியில் மண்ணுக்கே மறுபடி போய்ச்
சேருவது போல,
அலைகள் நீராகவும், நகைகள் தங்கமாகவும்
பழைய சொந்த நிலைக்கு மீளுவது போல,
ஆன்மாவிலிருந்து வெளிப்பட்ட உலகமும்
மீண்டும் ஆன்மாவுக்குத் திரும்பிச் செல்கிறது.

இருபத்தேழு

கயிற்றைக் காணாதபோது
மனிதன், பாம்பை (அதில்) காண்கிறான்.
கயிற்றைக் காணும் போது
பாம்பு மறைந்து விடுகிறது.
அதே போல,
ஆன்மாவைக் காணாத போது உலகம் தென்படுகிறது.
ஆன்மாவைக் காணுகையில் உலகம் மறைந்துவிடுகிறது.

இருபத்தெட்டு

கயிற்றை அறியாத போது
பாம்பு காணப்படுவது போல,
கண்ணுக்குப் புலப்படாத ஆன்மாவை நாம் மறந்துவிடுவதால்
அம் மறதி
உலகம் தோன்றுவதற்கு ஏதுவாகிறது.

### இருபத்தொன்பது

விழிப்பு நிலையில்
கனவு பொய்யாகிறது,
கனவு நிலையில்
விழிப்புநிலை பொய்யாகிறது;
அதுபோல,
வாழ்வு நிலையில் இறப்பு பொய்யாகவும்,
இறப்பு நிலையில் பிறப்பு பொய்யாகவும்
ஆகின்றன.

### முப்பது

இவ்வாறு இருத்தலின்
இவை யாவும் மெய்யு மல்ல பொய்யு மல்ல.
இவை
மயக்கத்தின் விளைவுகள்,
பழைய அனுபவங்களை ஒட்டி எழுந்த மனப் பதிவுகள்.

○

## அதிகாரம் மூன்று

## சீவன் முத்தர் யார்?

ஒன்று

ஆசை என்னும் உலர்ந்த புல்லை எரிக்கும் தீ
ஆன்ம ஞானம் ஆகும்.
இது தான் உண்மையான சமாதி எனப்படுமே தவிர
வெறுமனே வாய்மூடி மௌனியாக இருப்பது
சமாதி எனப்படுவதில்லை.

இரண்டு

பிரபஞ்சம் முழுதும் உணர்வே தவிர வேறொன்றுமில்லை
என்பதை அறிந்து
எவன் மிக அமைதியாக இருக்கிறானோ
அவனைப் பிரம்மம் என்ற கவசம் காக்கிறது.
அவன் மகிழ்ச்சியோடு இருக்கிறான்.

மூன்று

எவன் எல்லாவற்றையும் கடந்த நிலையை எய்தி
முழுமதிபோல்
எக்காலமும் குளிர்ச்சியாக இருக்கிறானோ
அவனே மா தேவன்.

நான்கு

பிரம்மத்தைப் பற்றி உபநிடதங்கள் இயம்புவதை
எவன் தன் உள்ளார்ந்த மனத்தில்
மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்க்க வல்லவனாக,
இன்ப துன்பங்களில் பாதிக்கப் படாதவனாக,
இருக்கிறானோ, அவன்
உலக பந்தங்களால் வேதனைப்படுவதில்லை.

ஐந்து

தீப் பற்றி எரிகின்ற மலையில்
பறவைகளும் மிருகங்களும் தங்க மாட்டா,

அது போல,
தீய எண்ணங்கள் ஆன்ம ஞானியிடம் தோன்றுவ தில்லை.

ஆறு

இவர்கள் எவ்வளவு தூரம்
பிறருடைய கோபத்தால் பாதிக்கப்படுகிறார்கள்?
கோபமூட்டப்பட்டால் தங்களுடைய உணர்ச்சிகளை
இவர்களால் அடக்க முடிகிறதா?
— என்றெல்லாம் சோதித்துப் பார்ப்பதற்காகவே
அறிவாளிகளும்
முட்டாள்களைப் போலச்
சிற்சில சமயங்களில் பிறரைக் கோபித்துக் கொள்ளுகிறார்கள்.

ஏழு

பாம்பைக் காண்பதாக நினைக்கிற ஒருவனுக்கு
உடம்பெல்லாம் நடுங்குகிறது;
உண்மையில் அது பாம்பில்லை என்பதை
அறிந்த பிறகும் கொஞ்ச நேரத்துக்கு
நடுக்கம் இருந்து கொண்டிருக்கிறது.
அதுபோல,
மயக்கங்கள் அனைத்தையும் ஒழித்த பிறகும்
மயக்கங்களின் முன்னைய தாக்கம்
சிறிது காலம் விடாது நிற்கும்.

எட்டு

கண்ணாடியின்மீது படும் நிழல்களால்
அக் கண்ணாடி கறைபடாதது போல,
மெய்ப்பொருளை உணர்ந்தவன்
தனது செயல்களின் விளைவுகளால் பாதிக்கப்படுவதில்லை.

ஒன்பது

புறத்தே தான் செய்யும் செயல்களில்
ஈடுபாடு காட்டினாலும்

மெய்ப்பொருளை உணர்ந்தவன்
எக்காலத்தும்
உறக்கத்தில் ஆழ்ந்தவனைப்போல் மிகமிக அமைதியும்
உள்முக நோக்கமும் கொண்டவனாக இருக்கிறான்.

பத்து

யோகிகள்,
இருப்பது ஒன்றே என்ற அத்வைதப் பாங்கில்
உறுதி பூண்டவராகவும்,
முழுக்க முழுக்க மன அமைதி எய்தியவராகவும்
தங்கள் பணிகளை மேற்கொள்ளுகிறார்கள்.
இவ் வுலகைக் கனவாகக் கருதிக்
கடமை ஆற்றுகிறார்கள்.

பதினொன்று

மெய்ப் பொருளை உணர்ந்தவனுக்குச்
சாவு இன்றே வருக, அல்லது
ஊழி பல கழித்து நின்றே வருக; எங்ஙன மாயினும்
அவன், சேற்றிற் புதைந்து கிடந்த பொன் போன்று
மாசு மறுவற்றிருக்கிறான்.

பன்னிரண்டு

அவன் தன் உடலைக் காசியில் உகுக்கலாம்
அல்லது
நாயைத் தின்றுழலும் புலையன் வீட்டில் உகுக்கலாம்.
பற்றற்றவ னாகிய அவன்
ஞானத்தை எய்திய அக் கணத்திலேயே முத்தனாகிறான்.

பதின்மூன்று

இராமா,
பற்றற்றவனுக்கு இவ்வுலகம்,
மண்ணில் பசுவின் கால்குளம்பு பதிந்த
தடம் போன்றது;

அவனுக்கு மேருமலை, ஒரு சாதாரண மேடு;
வெட்டவெளி, ஒரு சிறு பெட்டியின் உள்ளிடம்;
மூன்று உலகங்களும், ஒரு புல்லின் தோகை.

பதினான்கு

மெய்ப் பொருள் உணர்ந்தவன்,
உள்ளே ஒன்று மில்லாத வெறும் பானையைப் போன்று
உள்ளும் புறமும் வெறுமையாக இருக்கிறான்;
அதே சமயத்தில்
கடலில் மூழ்கியிருக்கும் பானையைப் போன்று
உள்ளும் புறமும் நிறைந்தும் இருக்கிறான்.

○ புறப்பொருட் சார்பாகிய பதிவுகளும், கருத்தமைதிகளும் இல்லாமையால் வெறுமையோடு இருக்கிறான்; மெய்யுணர்வு நிலைமையால் உள்ளும் புறமும் நிறைந்திருக்கிறான் என்பதாம்.

பதினைந்து

எவன், தான் காணும் பொருள்களைத் தனக்கு
வேண்டுமென்பதும் வேண்டாமென்பதும் அற்றவனாக
இருக்கிறானோ,
எவன், உறக்கத்தில் இருப்பவனைப்போல்
நடந்து கொள்கிறானோ,
அவன் முத்தன் எனப்படுகிறான்.

பதினாறு

எவன்
ஆசைகள் எனப்படும் முண்டு முடிச்சுகள்
நீங்கி யுள்ளானோ,
எவனுடைய ஐயப்பாடுகள் அனைத்தும் தீர்ந்துவிட்டனவோ,
அவன்
உடல் வாழ்க்கை கொண்டுள்ள போதே
முத்தனாவான்.

பந்தப் பட்டவன் போன்று காணப்படினும்
அவன் வீடு பெற்றவன்;
ஓவியமாக வரையப்பட்ட விளக்கென
நிலவுகிருன் அவன்.

பதினேழு

எவன், யான் எனது என்னும் எண்ணங்களையும்
அவற்றினின்று முளைவிடும் எண்ணங்களையும்
விளையாட்டுப்போல வெகு இலேசாக
நீக்கிவிட்டானே,
எவன்,
தனது தியானப் பொருளையும்கூடப் போக்கிவிட்டானே
அவன்
உடல் பெற்றுள்ளபோதே முத்தன் எனப்படுகிருன்.

பதினெட்டு

எவன், குருடனைப் போலத்
தன் உறவினரைக் கண்டும் காணமாட்டாதவனுக
இருக்கிருனே,
எவன் பாம்பைக் கண்டு அஞ்சுவது போலப்
பந்தங்களைக் கண்டு அஞ்சுகிருனே,
எவன் புலனுகர்ச்சிப் போகப் பொருள்களை
நோயென நோக்குகிருனே,
எவன் பெண்களின் கூட்டுறவைப்
புல்லின் தோகையைப் போல் துச்சமாக எண்ணுகிருனே,
எவன் பகை நட்பு என்ற பாகுபாட்டினின்றும்
நீங்கி விட்டானே,
அவன் இம்மையிலும் சரி மறுமையிலும் சரி
மகிழ்ச்சி யுறுகிருன்.

பத்தொன்பது

தன் மனத்தினின்று எவன்
புலனுகர்ச்சிச் சுகம் தரும் எல்லாப் பொருள்களையும்

வெளியேற்றுகிருனே,
முழு அமைதி அடையப் பெற்றவனுகி எவன்
வெட்ட வெளியைப் போன்று அசைவின்றி இருக்கின்ருனே
துயரத்தால் எவன் பாதிக்கப் படா திருக்கிருனே
அவனே முத்தன்; அவனே மா தேவன்.

இருபது

எவனுடைய இதய ஆசைகள்
முடிவுக்கு வந்து விட்டனவோ,
அந்த மேலோன் வீடு பெற்றவன் ; அவன்,
தியானம் செய்கிருஞ இல்லையா
கருமங்கள் செய்கிருஞ இல்லையா
என்பவை ஒரு பொருட்டாகா.

இருபத்தொன்று

பொருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளுதல்
பந்தம்.
பொருளல்லவற்றைக் கைவிடுதல் முத்தி.
எக் காலத்தும் சுதந்திரமாக இருப்பது ஆன்மா;
அதற்குப் பந்தமும் இல்லை, முத்தியும் இல்லை.

இருபத்திரண்டு

புலன்நுகர்ச்சிப் பொருள்கள் என்பன உண்மையில்
இல்லை என்பதைப் புரிந்து கொண்டு
மனமானது,
அப் பொருள்களினின்றும் முற்றிலும் விடுபடுமானுல்
அங்கே அப்பொழுதே முத்திப் பேரின்பம் கைகூடுகிறது.

இருபத்து மூன்று

பூர்வ வாசனைகள் (மறைந்துறை பதிவுகள்)
அனைத்தையும் அறவே கைவிடுவதே
உண்மையான முத்தி என்பது சான்ருேர் கருத்து.
அதுவே முத்தி எய்துவதற்குரிய

மாசிலா நெறியாகும்.

இருபத்து நான்கு

முத்தியென்பது
வானத்தின் மறுபக்கத்தில் இல்லை;
பாதாளத்திலும் இல்லை.
ஆசைகள் எல்லாவற்றையும்
வேரோடும் களைந்தொழிப்பதன் மூலமாக
மனத்தை நாசம் செய்வது
முத்தியெனக் கருதப்படுகிறது.

இருபத்தைந்து

இராமா,
அறிவு என்பது இல்லை, அறியாமை என்பதும் இல்லை;
மனம் என்பது இல்லை, சீவன் என்பதும் இல்லை.
இவை யாவும்
பிரம்மத்தில் தோன்றும் கற்பனைகளே.

இருபத்தாறு

எல்லையில்லாத தூய உணர்விலும், ஆனந்தத்திலும்
வரம்பற்ற அத்வைதத்திலும்
நிலைபெற்று நிற்பவனுக்கு
உள்ளதாக இருப்பது ஒன்றுதான்;
இரண்டாவ தென்பதே கிடையாது.
அப்படியிருக்க அவனுக்குப் பந்தம் ஏது? விடுதலை ஏது?

இருபத்தேழு

இராமா,
மனம் தன் செயலாலே
தன்னைப் பந்தப்படுத்துக் கொள்கிறது;
அது அமைதியுறும் பொழுது
விடுதலை பெறுகிறது.

## அதிகாரம் நான்கு

# மனமாவது அழிவதாவது?

ஒன்று

உணர்வு என்பது பிரிவுகளற்றதாய்,
மொத்தமாக—ஒரே பொருளாக—உள்ளது.
அது தனக்கு விருப்பமான பொருள்களைக் கற்பனை
செய்து கொண்டு
அவற்றை நாடி அலைகிறது.
அப்போது அது மனம் எனப்படுகிறது.

இரண்டு

நீரினின்று சிறு அலைகள் கிளம்புவது போல,
எங்கும் நிறைந்த—எல்லாம் வல்ல
சர்வேசுவரனிடமிருந்து தனித்தனிப் பொருள்களைக்
கற்பிதம் செய்யும் ஆற்றல் வெளிப்படுகிறது.

மூன்று

காற்றிலிருந்து பிறக்கும் நெருப்பு
அதே காற்றினால் அணைவதைப் போல,
கற்பனையில் பிறந்தது கற்பனையால் அழிகிறது.

நான்கு

மறதியாற் கற்பனை தோன்றுகிறது;
கற்பனையால் மனம் உதிக்கிறது.
தான் இறந்ததாகக் கனவு கண்டவன்
உண்மையில் இறவாதது போல
ஆராய்ந்து பார்த்தால்
இந்த மனமும் தன் இருப்பு அழிந்துவிடுகிறது.

ஐந்து

பொருளல்லவற்றைப் பொருளாகக் கொள்ளும் செயல்,
தவருகப் புரிந்து கொள்ளலின் காரணமாக ஏற்படுகிறது.
இராமா,
எது பொய்யை மெய் யென்று கொள்கிறதோ
அதுவே மனம் என அறிவாயாக.

ஆறு

'இது அவன்', 'இது நான்', 'அது என்னுடையது'.
என்பன வாகிய எண்ணங்களே மனம்.
அந்தத் தவருய கருத்துக்களைச்
சிந்தித்துப் பார்த்தால்
மனம் மறைந்து விடுகிறது.

ஏழு

சிலவற்றை வேண்டு மென்பதும்
சிலவற்றை வேண்டா மென்பதும்
மனத்தின் இயல்பு.
இதுவே பந்தம், வேறில்லை.

எட்டு

இந்த மனம் உலகத்தைப் படைக்கிறது.
மனம் தான் மனிதன்.
மனத்திஞல் செய்யப்பட்டதுவே
செயலாகக் கருதப் படுகிறதே தவிர
உடலிஞல் செய்யப் பட்டது அல்ல.
மனைவியைக் கட்டித் தழுவுகிற அதே கைகள்
மகளையும் கட்டித் தழுவுகின்றன.
ஓ இங்கு உடம்பின் செயல் ஒன்றே;
ஆஞல் மனத்தின் நிலை வேறு.

ஒன்பது

புறத்தே காணப்படும் பொருள்களை
மனம் படைக்கிறது.
மூன்று உலகங்களும் மனத்தில் இருக்கின்றன.
மனம் மறையும் போது
உலகமும் மறைகிறது.
முயன்று முயன்று
மனத்தைத் தூய்தாக்க வேண்டும்.

பத்து

மனமானது
மறைந்துள்ள பதிவுகளால் கட்டுப்பட்டிருக்கிறது.
பதிவுகளற்ற போது
விட்டு விடுதலை யாகிறது.
ஆகையால், இராமா,
விவேகத்தினல்,
பதிவுகளற்ற நிலையை விரைவில் உண்டாக்கிக் கொள்.

பதினென்று

ஒரு சிறு மேகம்
நிலவைக் களங்கப் படுத்துவது போல,
வெள்ளை பூசிய சுவரைச்
சிறிதளவு மை களங்கப் படுத்துவது போல,
ஆசையெனும் கொடும் பிசாசு
அந்தரங்க மனிதனைக் களங்கப் படுத்துகிறது.

பன்னிரண்டு

இராமா,
எவனெருவன் தன் மனத்தை உள்முகமாகத் திருப்பி,
மூன்று உலகங்களையும் உலர்ந்த புல்லெனக் கருதி
ஞானம் என்ற நெருப்பில்
ஆகுதி செய்கிருனே, அவன்,
மனத்தின் மயக்கங்களி லிருந்து விடுபடுகிருன்.

பதின்மூன்று

வேண்டுதல் வேண்டாமை என்பவற்றின்
உண்மைப்பொருள் என்ன என்பதை
நன்கு அறிந்தவனுய்,
வேருென்றிலும் மனத்தைச் செலுத்தாமல்,
தன்னில் தானுக நிலைப்பவனுக்கு
மனம் என்பதொன்று உண்டாவதில்லை.

பதினுன்கு

விழிப்பு நிலையில் மனம்
பயங்கரமாக இருக்கிறது,
கனவு நிலையில் சாந்தமாக இருக்கிறது,
ஆழ்ந்த உறக்கத்தில் மந்தமாக இருக்கிறது.
இம் மூன்று நிலைகளையும் கடந்த நிலையில்
அது, மனம், இறந்துவிடுகிறது.

பதினைந்து

கடகவிதை (தேற்ருங்கொட்டை)யின் தூள்,
கலங்கலாக உள்ள நீரைத் தெளியச்செய்த பின்னர்
தானும் நீரில் கலந்துவிடுவது போல,
மனமும்
தன்பால் பொதிந்த பதிவுகளைக் களைந்த பிறகு
ஆன்மாவில் கலந்து விடுகிறது.

பதினுறு

மனமே உலக பந்தம்;
மனம்தான் தளை எனவும் சொல்லப்படுகிறது.
காற்று மரத்தை ஆட்டி வைப்பதுபோல
மனம் உடலை ஆட்டி வைக்கிறது.

பதினேழு

கையோடு கையைப் பிசைந்து
பல்லோடு பல்லை இறுக்கிக்
கைகால்களை முறுக்கி
உறுதிகொண்டு
உன் மனத்தை வெல்லு.
அதுவே, நீ முதலில் செய்ய வேண்டுவது.

பதினெட்டு

மனத்தை வெல்ல மாட்டாஞகி
அதன் போக்கிலேயே போய்ச் சுற்றித்திரிந்து,
தியானத்தைப் பற்றிக் கண்டபடி பேசி அலைகிருனே,
அந்த முட்டாளுக்கு வெட்கம் என்பதில்லையா?

பத்தொன்பது

நாம் வெல்ல வேண்டிய ஒரே தேவதை மனம்தான்.
அந்த வெற்றி
எல்லாவற்றையும் அளிக்க வல்லது.
மனத்தை வெற்றி கொள்ளாமல் செய்யப்படும் பிற
முயற்சிகள் யாவும் பயனற்றவை.

இருபது

தெய்வானுகூலம் பெற்ற வாழ்வின்
அடிப்படையாக அமைந்திருப்பது கலங்காத மனம் உடைமை.
அதன் மூலம் முத்தி அடையலாம்.
மனத்தை வெல்லாத நிலையில்
மூன்றுலகங்களை வென்ருலும் அது ஒரு
புல்லின் தாள்போல் துச்சமாகும்.

இருபத்தொன்று

நல்லோர் இணக்கம்,
ஒட்டிக்கொண்டு வரும் பதிவுகளை அப்பாற்படுத்துதல்,
தன்னைப் பற்றிய ஆராய்வு,

மூச்சைக் கட்டுப்படுத்துதல் — ஆகியவை
மனத்தை வெல்லும் உபாயங்களாகும்.

இருபத்திரண்டு

கால்களுக்குத் தோல் செருப்பு அணிந்திருப்பவனுக்குத்
தரை எங்குமே
தோலால் மூடிவைத்திருப்பது போன்ற நிலைமைதான்;
அதுபோன்று
துண்டுபடாமல்
நிறைவாக இருக்கும் மனத்திற்கு
இவ்வுலகம்
அமுத மயமாகப் பொங்கி வழிகிறது.

இருபத்துமூன்று

நான் பிரம்மம் இல்லை என்று நினைக்கும் மனம்
தளைப்படுகிறது;
நான் பிரம்மம் என்று எண்ணுவதால்
அது முற்றும் விடுதலை பெறுகிறது.

இருபத்துநான்கு

மனம் அற்ற நிலையில்
இருமையும் இல்லை, ஒருமையும் இல்லை. அப்போது
துன்பங்களினின்று நீங்கிய —
நித்தியமான — அமைதி நிறைந்த —
வான்பொருளாகிய பிரம்மமே எஞ்சியுள்ளது.

இருபத்தைந்து

தூய மனத்தை எய்தியவன்,
தூய உணர்வு நிலையை எய்துகிறான்;
மரணத்தை வெல்லுகிறான்.
அவன் அடைகின்ற
உயரிய ஆனந்தத்துக்கு ஈடாக
எதுவுமே இல்லை.

அதிகாரம் ஐந்து

# மறைந்துறை பதிவுகளைத் தொலைப்பது எப்படி?

ஒன்று

இராமா,
ஆன்மாவின் தன்மையை ஆராய்தல் அல்லது
'நான் யார்?' என்பதை ஆராய்தலாகிய செயல்,
மனம் எனும் கொடிய மரத்தின் விதைகளை
எரிக்கும் நெருப்பு ஆகும்.

இரண்டு

படத்தில் வரையப்பட்ட கொடிகள்
காற்றினல் பாதிக்கப்படாதது போல,
தெளிந்த அறிவில் உறுதியாக நிலைபெற்ருேரையும்
மீண்டும் மீண்டும் ஆராய்ச்சியில் ஈடுபடுவோரையும்
துன்பங்கள் பாதிப்பதில்லை.

மூன்று

தன்னைப் பற்றிய உண்மையினை ஆராய்வதே
அறிவு என
மெய்யறிஞர் பகருகின்றனர்.
பாலின் இன்சுவை
பாலில் அடங்கியிருப்பதுபோல்,
எது அறிய வேண்டுவதோ
அது, அதிலேயே (ஆன்ம ஞானத்திலேயே)
அடங்கியிருக்கிறது.

நான்கு

தன்னை உணர்ந்தவனுக்குப்
பிரமன், விஷ்ணு, சிவன் ஆகியோர்
இரங்குதற்குரியவர்.

ஐந்து

'பரந்த இந்தப் பிரபஞ்சம் என்பது யாது?'
'நான் யார்?'
என்ற கேள்விகளை இடையருது கேட்பதில்
விருப்பமுள்ளவனுக்கு
இவ்வுலகம் முற்றும் பொய்யாகிறது.

ஆறு

இது கானல் நீர் எனத் தெளிந்தவனுக்கு
அங்கே நீர் தோன்ருதது போல,
எங்கே பிரம்மம் எனத் தெளிந்து
அறியாமையை அழித்தவனுக்கு
மறைந்துறையும் பதிவுகள் தலைகாட்ட மாட்டா.

ஏழு

மறைந்துறை பதிவுகளைத் தொலைப்பதன் மூலமாகவோ,
மூச்சைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகவோ
மனம் தனது நிலை அழிகிறது. அதற்கு
உனக்கு விருப்பமான உபாயத்தை மேற்கொள்.

எட்டு

தூயனே,
முனிவர்களுடன் கூடி வாழ்,
உண்மையான ஞான நூல்களை ஓது,
நீ பேருணர்வினன் ஆவாய்.
அந் நிலையை எய்துதற்கு மாதங்கள் ஆகா,
நாட்களே ஆகும்.

ஒன்பது

ஞானிகளுடன் வாழும் போதும்
உலக பந்தங்களான எண்ணங்களைத் துறக்கும்போதும்
உடல் மறையக்கூடியது என்பதை நினைவுகொள்ளும் போதும்
மறைந்துறையும் பதிவுகள் தம்செய லிழக்கின்றன.

பத்து

இராகவனே,
அறிவிலிகளும் கூட
உறுதியான நம்பிக்கையினல்
நஞ்சை அமுதமாகவும், அமுதை நஞ்சாகவும்
மாற்றுகிருர்கள்.

பதினென்று

இவ் வுடம்பை மெய்யென்று கருதும்போது
அது உடம்பாலாகிய பயனைத் தருகிறது.
அது! பொய்யென்று கருதும்போது
அது வெட்டவெளி யாகிறது.

பன்னிரண்டு

இராமா,
மெத்தையில் படுத்து உறங்கும்போது
கனவுடலோடு எல்லாத் திசைகளிலும்
சுற்றியலைகிருய்.
இப்போது விழிப்பு நிலையில்
எங்கே அந்த உடல்?

பதின்மூன்று

சண்டாளி ஒருத்தி நாயின் இறைச்சியைக்
கொண்டு செல்கையில் மேன்மகன் ஒருவன்
நெடுந்தூரம் விலகிச் செல்லுவது போல
'இந்த உடல் நான்' என்ற எண்ணத்தையும்
இகழ்ந்து ஒதுக்க வேண்டும்.
அதனல் எல்லாவற்றையும் இழக்க நேரினும் சரி.

பதினன்கு

சாதகன் எப்பொழுதும்
பிரம்மத்தையே நினைப்பவனுய்,
துன்பங்களினின்று விடுபட்டு அமைதியுறுவானுகில்

அவனுடைய
'யான்' 'எனது' என்னும் பாவனைகள்
தாமாக அழிந்துவிடுகின்றன.

**பதினைந்து**

காணப்படும் பொருள்கள் யாவும்
ஒன்றென்பதை உணர்ந்தவன்
அமைதியாக — பதற்றமின்றிச் சமநிலையில்
நான் என்ற எண்ணமற்று
வெட்டவெளி போன்று தூயவனாக இருக்கிறான்.

**பதினாறு**

உள்ளூர ஒருவன் அமைதியுற்றிருப்பானாகில்
உலக முழுதும் அவனுக்கு அமைதியாக இருக்கும்.
உள்ளூர அவன் பரபரப்புற்றிருந்தால்
உலக முழுதும் அவனுக்குத்
தீப்பற்றி எரிவதுபோல் காணப்படும்.

○

## அதிகாரம் ஆறு

# தன்னைத் தியானித்தல்
# ஆன்மத் தியானம்

ஒன்று

தூய, களங்கமற்ற, எல்லையற்ற
உணர்வு நான்.
நான் மாயைக்கு அப்பாற்பட்டவன்.
இவ்வுடல் செயலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது
அதனை வேறொருவனுடைய உடலென்று நான் கருதுகிறேன்.
○ ஞானி தனது உடம்பைச் சொந்தம் பாராட்டுவதில்லை.

இரண்டு

மனம், புத்தி, இந்திரியங்கள் யாவும்
உணர்வின் விளையாட்டுகள்.
இவை பொய்யானவை. அகநோக்கு இன்மையால்
உள்ளன போலக் காணப்படுகின்றன.

மூன்று

வறுமையினால் விடாமலும்
வளமுற்றபோது வையகத்தில் யாவர்க்கும் நண்பனாகவும்
இருப்பு, இறப்பு என்ற எண்ணங்கள் இன்றியும்
இருக்கிறேன். ஆகவே,
துன்பங்களினின்று விடுபட்டு வாழ்கிறேன்.

நான்கு

செயலற்றவன் நான்.
ஆசையற்றவன்; தெளிவுள்ள வானம் போன்றவன்;
அவாவினின்றும் விடுபட்டவன்; அமைதியானவன்;
உருவற்றவன் நான்.
நான் என்றென்றும் உள்ளவன்; அசைவிலாதவன்.

ஐந்து

பஞ்ச பூதங்களும், மூன்று உலகங்களும், நானும்
தூய உணர்வு
என்பதனைத் தெளிவாக இப்போது உணர்கிறேன்.

ஆறு

நான் எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டவன்;
நான் எங்குமுளன்; நான் வெட்டவெளி போன்றவன்.
எது உள்ளதோ அதுவே நான்.
இதற்கு மேல் என்னால் வேறொன்றும் கூற இயலாது.

ஏழு

நான் எல்லையற்ற உணர்வுக் கடல்.
பிரபஞ்சம் என்ற கற்பனை அலைகள் என்னில் கிளம்புக
அல்லது வீழ்க.
என்னிடத்துப் பெருக்கமோ குறுக்கமோ கிடையாது.

எட்டு

எல்லையற்ற உணர்வுக் கடலாகிய என்னில்
சீவர்களாகிய அலைகள் எழுகின்றன.
சிறிது நேரம் விளையாடுகின்றன.
பின்னர், தத்தம் இயல்புக் கேற்ற வண்ணம் மறைகின்றன.
எவ்வளவு வியப்பானவை இந்நிகழ்வுகள்.

ஒன்பது

எனது அறியாமை காரணமாகத் தோற்றம் கொண்டுள்ள
உலகம் அவ்வாறே என்னில் கரைந்து விடுகிறது.
நான் இப்பொழுது இந்த உலகை
உணர்வின் பேரானந்தப் பொருளாக அனுபவிக்கிறேன்.

பத்து

என்றென்றும் கட்டற்று
உள்ளார்ந்த உணர்வாகிய நான் எனும் ஆன்மாவை,
எல்லா உயிர்களிலும் இருக்கின்ற என்னை,
நான் விழுந்து கும்பிடுகின்றேன்.

அதிகாரம் ஏழு

## அகம் தூயதாவது எப்படி?

ஒன்று

இராகவனே,
புறத்தே செயலாளனாகவும் அகத்தே செயலற்றவனாகவும்
இருந்தவாறு
நீ உலகில் ஈடுபட்டிருப்பாயாக.

இரண்டு

இராகவனே,
அகத்தே ஆசைகள் அனைத்தையும் துறந்துவிடு.
பற்றுகளினின்றும், மறைந்துறை பதிவுகளினின்றும்
விடுபட்டிரு.
வெளிப்பார்வைக்கு வேலை செய்பவனாக
உலகியலில் காட்சி கொடு.

மூன்று

எண்ணுதற்குரிய பொருள்கள் அனைத்தையும்
மனத்தினின்று அகற்றி விடு.
அண்டம் அளாவிய பார்வையோடு இரு.
தன்னுள் தானாய் நிலைத்திரு.
உடம்பொடு வாழும் பொழுதே வீடுபெற்றவனாக
[சீவன் முக்தனாக] இரு.
இவ்விதமாக உலக வாழ்வில் ஈடுபடு;

நான்கு

நான் ஒரே தூய உணர்வு என்ற உறுதிப்பாட்டில்
நிலை நின்று,
இருமையாகிய
[விருப்பு வெறுப்பு நன்மை தீமை மோட்சம் நரகம் முதலிய]
காட்டை எரி;
மகிழ்ச்சியாக இரு.

ஐந்து

'இந்த உடம்பே நான்'
என்ற எண்ணத்தால் எல்லாப் பக்கங்களிலும்
இறுகக் கட்டப்பட்டுள்ளாய் நீ.
'நான் பேருணர்வு'
என்று அறிவதாகிய ஞான வாளால்
அந்தக் கட்டினை வெட்டி விடு.
மகிழ்வோடு இரு.

ஆறு

பொருளல்லவற்றின் மீதுள்ள பற்றினைக் களை.
உலகம் பகுப்பிலா முழுமை
என்று கருது.
கவனத்தை உள்முகமாகத் திருப்பு,
உளங் குவித்துத்
தூய பேருணர்வாக இரு.

ஏழு

உனது உண்மையான இயல்பு.
விழிப்பு, கனவு, ஆழ் துயில் என்ற நிலைகளுக்கு அப்பாற்பட்ட.
தூய உணர்வு;
நீ எப்போதும்
அவ்வாறே இரு.

எட்டு

தடந்தோள் வீர,
மனக் கருத்தோட்டங்களி னின்றும் எப்பொழுதும்
விடுபட்டிரு.
பாறையினைப் போல் இரு.
பாறைபோல உணர்ச்சியற்று இராவிடினும்.
அதைப் போலத் திட்பமுடன் விடுபட்டிரு.

ஒன்பது

அறிவோன், அறியப்படுவது ஆகிய
இருதிறப் பொருளாக இராதே.
கருத்தோட்டங்களை விட்டொழி.
நீயாக நீ இரு.

பத்து

ஒரு கருத்தோட்டத்தால்
இன்னொரு கருத்தோட்டத்தைக் களைந்து விடு.
மனத்தை
மனத்தால் களைந்து விடு.
ஆன்மாவாகிய 'தான்' என்பதில் தங்கி இரு.
புனிதனே, இது என்ன அவ்வளவு கடினமா?

பதினொன்று

கவலைகளால் பழுக்கக் காய்ந்துள்ள
இரும்பனைய நின் மனத்தை,
ஞான நூல்களைப் பயின்று
வெட்டிரும்பு போல் கூர்மை எய்திய மனத்தால்
துண்டித்துக் கொள்வாயாக.

பன்னிரண்டு

இராகவனே,
உணர்ச்சியற்றதும் ஊமையானதும் ஆன
இந்த உடம்பால் உனக்கு என்ன ஆகவேண்டியிருக்கிறது?
இத்தகைய உடல் காரணமாக ஏற்படும்
இன்ப துன்பங்களால்
அனுதைபோல் துயருறுவானேன்?

பதின்மூன்று

பேருணர்வு வடிவமாக இருக்கும் உனக்கும்
தசை குருதி முதலியவற்ருல் ஆன உடம்பிற்கும்

எவ்வளவு அகன்ற வேறுபாடு இருக்கின்றன!
இதை அறிந்த பின்பும்
இந்த உடம்பே ஆன்மா என்று கருதுவதை
ஏன் விட்டொழியாது இருக்கிருய்?

பதினுன்கு

இந்த யாக்கை
மரக்கட்டை மண்ணுங்கட்டி
என்று அறியும் அறிவு தான்
பரமான்மாவை உணர்தற்கு உதவி செய்யும்.

பதினைந்து

மெய்யான பிரம்மத்தை
மக்கள் மறந்து விடுகிருர்கள்.
எது பொய்யோ
அது உண்மையானதாக அவர்களுக்குக் காட்சியளிக்கிறது.
இது எவ்வளவு விந்தையானது!

பதினறு

மேலான பரம்பொருளை முற்றும் மறந்து விட்டு
'இது என்னுடையது'
'இது என்னுடையது'
என்ற எண்ணம் அவர்களைக் கெட்டியாகப்
பற்றிக் கொண்டிருக்கிறது;
இதுவும் விநோதமே !

பதினேழு

கண்ணுடி
தனக்கு முன்னல் உள்ள பொருள்களைக் காட்டுகிறது.
ஆனல் அந்தப் பொருள்களால் அந்தக்
கண்ணுடி சிறிதும் பாதிக்கப் பெறுவதில்லை.
அவ்வாறே நின் கடமையைச் செய்து வருங்கால்
பற்றற்றுச் செய்து வருக !

பதினெட்டு

எல்லாப் பொருளும் பிரம்மம்
என்ற உறுதி,
விடுதலைக்கு வழி வகுக்கிறது;
ஆகவே,
பேதைமையாகிய இருமையை அகற்று.
அறவே அகற்று.

## அதிகாரம் எட்டு

# யோகி யாரைக் கும்பிடுகிறுன்?

ஒன்று

உன்னை நீ உடலிலிருந்து வேருகப் பிரித்து
மெய்யுணர்வில் சுகமாகத் தங்கியிருப்பா யாகில்
முழுமுதற் பொருளாகுவாய்; அப்பொழுது
மற்றவை யாவும் புல்லெனத் தோன்றும்.

இரண்டு

எதை அறிந்து கொள்வதன் வாயிலாக
நீ இந்த உலகத்தை அறிந்து கொள்கிருயோ
அதை அறிந்து கொண்ட பிறகு
உன் மனத்தை உள்முகமாகத் திருப்பு; அப்பொழுது
ஆன்மப் பெருஞ்சுடராகிய உன்னைத்
தெளிவாகக் காண்பாய்.

மூன்று

இராகவா,
எதன் துணையால் சுவை ஒளி ஓசை நாற்றம்
ஆகியவற்றை அறிகிருயோ
அதுவே உன் ஆன்மா, பரப்பிரம்மம், தேவதேவன்
என அறிந்துகொள்.

நான்கு

இராகவா,
உயிர்கள் எதனில் தம் உயிர்ப்பைப் பெறுகின்றனவோ,
எது உயிர்களைப் படைக்கின்றதோ,
அதுவே நின் உண்மையான ஆன்மா
என்று அறிந்து கொள்.

ஐந்து

பொய் என உன் பகுத்தறிவுக்குத் தென்படக் கூடிய
யாவற்றையும் ஒதுக்கிய பிறகு

எது எஞ்சியிருக்கிறதோ
அதுவே தூய மெய்யுணர்வு
அதுவே நீ என்றுணர்.

**ஆறு**

அறிவு என்பது
உன்னை விட்டுப் பிரிந்து தனியே இருக்க வில்லை;
அறியப் படுவது எதுவோ
அதுவும் அறிவை விட்டுத் தனியே இருக்கவில்லை.
ஆகவே
ஆன்மாவைத் தவிர வேறொன்றும் கிடையாது.
அதை விட்டுத் தனித்து எதுவும் கிடையாது.

**ஏழு**

''பிரமன் விஷ்ணு சிவன் இந்திரன் மற்றும் தேவர்கள்
செய்வன எல்லாவற்றையும் செய்பவன்-
பேருணர்வின் வடிவாகிய நானே''
- இங்ஙனம் எண்ணுக எண்ணுக !

**எட்டு**

''நானே பிரபஞ்சம் அனைத்தும்,
நானே அழிவில்லாத மேலாம் ஆன்மா.
என்னை விடுத்து இறந்த காலமோ
எதிர் காலமோ கிடையாது''.
-இங்ஙனம் சிந்தை செய்.

**ஒன்பது**

''யாவும் பிரிக்க முடியாத மாறுதலற்ற ஒரே பிரம்மம்;
யாவும் ஒரே தூய உணர்வு
யாவும் ஒரே பொது ஆன்மா''
-இவ்வாறு சிந்தனை செய்க.

பந்து

''நான் என்பதும் இல்லை;
வேறு பொருள் எதுவும் இல்லை.
பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரண ஆனந்த மயமான பிரம்மம் ஒன்றே''
-என்று அமைதியாகத் தியானம் செய்,

பதினொன்று

பார்த்தலும் பார்க்கப் படுதலும் ஆகிய அறிவு
உடம்பெடுத்த எல்லாச் சீவன்களுக்கும் பொதுவானது.
ஆனல் யோகி மட்டும்
ஒரே ஆன்மாவைத்
தொழுகிருன்.

## அதிகாரம் ஒன்பது

# ஆன்மா என்றால் என்ன?

**ஒன்று**

உடல், புலன்கள் ஆகியவை ஒன்று கூடித்
தாமாக இயங்கும் பொழுது 'இது நான்' என்ற
எண்ணம் உதிக்கிறது.
இது,
அறியாமை அழுக்கில் தோய்ந்த சீவன் ஆகும்.

**இரண்டு**

எல்லாம் வெளிமயமான பேருணர்வு
என்ற எண்ணம் மனத்தில் நிலைத்து நிற்குமாயின்,
சீவன் ஆனது
எண்ணெய் தீர்ந்த விளக்குப் போல முடிந்து விடுகிறது.

**மூன்று**

பேய் என்ற ஒன்றைத்
தன் மனக் கோலத்தால் உருவாக்கிய குழந்தை
அதைத் தன்னினின்றும் வேறாகக் காண்பது போன்று,
அறிவற்ற சீவன் தன் மயக்க உணர்வால்
இந்தப் பொய்யான யாக்கையைப் படைக்கிறது;
பிறகு அதைத் தனியான ஒரு பொருளாகக்
காண்கிறது.

**நான்கு**

களி மண்ணால் செய்த யானையை
உயிருள்ள யானையாகக் கருதிச் சிறு குழந்தை
விளையாடுகிறது.
அறியாதவர்கள் அவ்வாறே
உடலையே ஆன்மா எனக் கருதிச்
செயல்களில் ஈடுபடுகிறார்கள்.

ஐந்து

ஓவியத்தில் காணப்படும் பாம்பை
ஓவியப் பாம்பு என்பது உணரும் போது அது
யாருக்கும் அச்சம் தருவதில்லை. அது போலச்
சீவன் என்ற பாம்பைப் பற்றி
நன்கு உணரும் பொழுது
துயரம் இல்லை, துயரத்தின் காரணமும் இல்லை.

ஆறு

பூ மாலையைப் பார்த்துப் பாம்பு என நினைக்கையில்
பாம்பு அதில் மறைந்து விடுகிறது;
அவ்வாறே
ஆன்மா வேறு தான் வேறு என்ற எண்ணம்
ஆன்மாவிலிருந்து தோன்றியது ; அது
ஆன்மாவிலே மறைகிறது.

ஏழு

அணிகலன்கள் பலவாக இருப்பினும்
பொன்னுக அவை யாவும் ஒன்றே,
அவ்வாறே
கிளைத்தவை பலவாயினும்
ஆன்மா ஒன்றே.

எட்டு

உடலின் உறுப்புக்கள் பல:
களிமண் கலங்கள் பல;
இங்ஙனம் ஒன்றே பலவிதமான
அசைபொருள்களாகவும் அசையாப் பொருள்களாகவும்
காணப்படுகிறது.

ஒன்பது

ஒரே முகம்
பளிங்கு, நீர், நெய், கண்ணுடி ஆகிய பல பொருள்களிலும்

பிரதிபலிப்பது போல,
ஒரே ஆன்மா
பல மனங்களில் அறிவாகப் பிரதிபலிக்கிறது.

பத்து

வானமானது,
தூசி புகை மேகம் முதலியவற்றால்
மாசு படிவதாகத் தென்படுகிறது;
அது போல
மாயையின் தன்மைகளோடு சார்ந்த ஆன்மா
அவற்றால் மாசு அடைவது போலக் காணப்படுகிறது.

பதினொன்று

நெருப்பைச் சார்ந்த உலோகம்
நெருப்பின் தன்மையை அடைவது போல,
ஆன்மாவைச் சார்ந்த புலன்களும்
ஆன்மாவின் தன்மையை அடைகின்றன.

பன்னிரண்டு

கண்ணுக்குப் புலப்படாத இராகு
நிலவோடு நெருக்கம் கொள்ளும் பொழுது
கண்ணுக்குப் புலப்படுகின்றது; அவ்வாறே
புலன்களால் அறியப்படும் பொருள்களோடு
நெருக்கம் கொள்ளும் பொழுது ஆன்மா
அறியப்படுகிறது.

பதின் மூன்று

நீரும் நெருப்பும் நெருங்கி இணையும் போது.
ஒன்று, மற்றொன்றின் தன்மையை அடைகின்றது;
அவ்வாறே
ஆன்மாவாகிய சத்தும்
உடலாகிய அசத்தும் கூடும் போது

உடல் சத்தாகவும்
ஆன்மா அசத்தாகவும் தோன்றுகின்றன.

பதினான்கு

அதிகமான தண்ணீரில் எறியப்பட்ட நெருப்பு
தனது தன்மையை இழப்பது போல
பொய்ப் பொருள்களோடும் சடப்பொருள்களோடும்
உறவாடுகிற உணர்வும்
தன்னியல்பை இழந்து
சடமானது போல் காணப்படுகிறது.

பதினைந்து

கரும்பிலிருந்து வெல்லத்தையும்
எள்ளிலிருந்து எண்ணெயையும்
கட்டையிலிருந்து நெருப்பையும்
கற்களிலிருந்து இரும்பையும்
முயன்று பெறுவதைப் போல
உடம்பில் உள்ள போதே ஆன்மாவையும்
முயன்றுதான் உணர்தல் வேண்டும்.

பதினாறு

உடைபடாத பளிங்கில் தென்படுகிற வானம் போல
உணர்வின் இயல்பான மாதேவன்
எல்லாப் பொருள்களிலும் காணப்படுகிறான்.

பதினேழு

பெருமதிப்புள்ள கற்களா லாகிய
குடத்தினுள் வைக்கப்பட்ட விளக்கு
தன் ஒளியால்
அதன் உள்ளும் புறமும் ஒளிரச் செய்வது போல
ஒரே ஆன்மா
எல்லாவற்றையும் ஒளிரச் செய்கிறது.

பதினெட்டு

கண்ணுடியில் பட்டுத் திரும்பும் கதிரவ ஞெளி
மற்றப் பொருள்களேயும் விளங்கச் செய்வது போல
ஆன்மா தூய அறிவில் பட்டு
மற்றப் பொருள்களேயும் பிரகாசிக்கச் செய்கிறது.

பத்தொன்பது

கயிற்றில் அரவுபோல, அதிசயமான இந்தப் பிரபஞ்சம்
எதில் தோன்றுகிறதோ
அது ஆதாரப் பொருள்,
அது என்றும் சுடர்கின்ற ஆன்மா.

இருபது

ஆன்மாவுக்குத் தொடக்கமும் இல்லே இறுதியும் இல்லே;
அது மாற்றமில்லாதது, உள்ளது, உணர்வுமயமானது;
அதுவே வெட்டவெளியாகத் தோற்றுகிறது;
அதுவே சீவனுக்குப் பிறப்பகம்;
மேலானவற்றிலும் மேலானது அது.

இருபத்தொன்று

ஆன்மா தூய மெய்யுணர்வானது, என்று முளது,
எங்கும் இருப்பது, மாருதது;
பகலவனேப் போல ஒளிமயமானது.

இருபத்திரண்டு

எங்கும் நிறைந்த ஆன்மா
எல்லாவற்றுக்கும் அடிப்படையானது.
நெருப்பு வேறு சூடுவேறு அல்லவே,
அவ்வாறே
பேரொளிப் பிழம்பான மெய்யுணர்வு வேறு
ஆன்மா வேறு அல்ல. அதனே
அனுபவத்தால் தான் உணர முடியும்.

### இருபத்துமூன்று

புத்தியாகக் கிளைக்காத
உணர்வு ஆகிய பரம ஆன்மா
எல்லாவற்றையும் புலப்படுத்துவது, பிரிவற்றது;
எல்லாவற்றையும் உள்ளும் புறமும்
ஊடுருவிப் பரவியுள்ளது; அதுவே அனைத்துக்கும்
உறுதியான ஆதாரமாக உள்ளது.

### இருபத்து நான்கு

முழு உணர்வே ஆன்மா.
தூய அறிவே ஆன்மா.
அது அழிவிலாதது; வேண்டுதல் வேண்டாமை என்ற
எல்லா எண்ணங்களிலிருந்தும் விடுபட்டது;
காலத்தாலும் தேசத்தாலும் இனத்தாலும்
கட்டுப் படாதது.

### இருபந்தைந்து

இந்தப் பிரபஞ்சத்திலுள்ள காற்று
எல்லாவற்றுள்ளும் பரவியிருப்பதைப் போல
ஆன்மா வாகிய தலைவன்
தனக்கென ஓர் உடலில்லாது எங்கும் உள்ளான்.

### இருபத்தாறு

பரந்து விரிந்த புவியில், அணிகலன்களில்,
ஆகாயத்தில், கதிரவனில், இருக்கின்ற உணர்வானது
நிலத்திற்கு அடியில் தம் கூடுகளில் கிடக்கும்
புழுக்களிலும் இருக்கின்றது.

### இருபத்தேழு

பந்தம் இல்லை; வீடும் இல்லை.
இருமை இல்லை; இரண்டின்மை என்பதில்லை.
பிரம்மம் ஒன்றே யாண்டும்
மெய்யுணர்வாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

## இருபத்தெட்டு

அறிவே பிரம்மம்.
உலகம் பிரம்மம்.
பலவகை மூலக் கூறுகள் பிரம்மம்.
நான் பிரம்மம்; என் பகைவனும் பிரம்மம்.
என் கேளும் கிளையும் பிரம்மம்.

## இருபத்தொன்பது

உணர்வு, உணரப்படும் பொருள் என்ற கருத்தே
பந்தமாகும்.
அதிலிருந்து விடுபடுவதே விடுதலை, முத்தி.
உணர்வும் உணரப்படு பொருளும் மற்ற யாவும்
ஆன்மாவே.
இதுவே மெய்யுணர்வுக் கொள்கைகள் அனைத்தின்
சாரமும் ஆகும்.

## முப்பது

இங்கே உள்ளது உணர்வு ஒன்றே.
இப் பிரபஞ்சம் உணர்வின்றி மற்றில்லை.
நீ உணர்வு நான் உணர்வு;
உலகங்கள் எல்லாமும் உணர்வு:
இதுவே முடிந்த முடிபு.

## முப்பத்தொன்று

இருப்பதும் ஒளிர்வதும் யாதும் ஆன்மாவே.
அது தவிர
ஒளிர்வதாகத் தெரிவன யாவும் உண்மையில் இல்லை.
உணர்வு ஒன்றே, தானாக,
சுயம்புவாகச் சுடர்வது.
தெரிபவர் தெரிவன பற்றிய எண்ணங்கள்
பயனற்ற அனுமானங்களே.

○

## அதிகாரம் பத்து

## விடுதலை

ஒன்று

புலன்கள் தமக்கு இதம் அளிக்கும் பொருள்களோடு
தொடர்பு கொள்ளுவதன் மூலம்
மேலாம் பேரின்பத்தைத் துய்க்க முடியாது.
ஒருமுகமான ஆன்ம ஆய்வினால்
மனம் சாகடிக்கப் படுவதே விழுமிய நிலையாகும்.

இரண்டு

புலன்களானவை தமக்குரிய பொருள்களோடு
உறவு கொள்ளுதலின் மூலம் ஏற்படுகிற இன்பம்
தாழ்வானது;
புலனுகர்வுப் பொருள்களின் தொடர்பே பந்தம்,
அதிலிருந்து விடுபடுவதே விடுதலை.

மூன்று

இருத்தல், இல்லா திருத்தல், என்பவற்றுக்கு இடையிலான
தூய நிலையை எய்துக.
அக வுலகாயினும் சரி, புற வுலகாயினும் சரி,
அதனை ஏற்காதே, விலக்காதே.

நான்கு

அதையே எப்போதும் நம்பியிரு.
அது எல்லையற்ற பரவெளி போன்ற
இதய மாகும்.
உணர்ச்சியுண்மை உணர்ச்சியின்மை
ஆகியவற்றுக்கு இடைப்பட்ட நிலையே
உண்மையான நித்தியப் பொருள்.

### ஐந்து

அறிபவன், அறியப்படுவது என்பன இருப்பதாக
நம்பிக்கை கொள்வது பந்தம் எனப்படும்.
அறிபவன் அறியப்படு பொருளால் பிணைப்புறுகின்றான்.
அறிய வேண்டுவது எதுவுமில்லை என்ற நிலையில்
அவன் விடுதலை பெறுகிறான்.

### ஆறு

காண்பார், காணப்படுவது, காணல் என்ற எண்ணங்களை
அவற்றுக்கு அடிப்படையாக அமைந்து கிடக்கும்
சென்ற காலத்துச் சுவடுகள் (வாசனைகள்)
என்பவற்றுடன் புறக்கணித்து விட்டு
நாம் ஆன்மாவைத் தியானிப்போம்.
அஃதே ஆதிச் சுடரொளி.
அதுவே காட்சிக்கு அடிப்படை.

### ஏழு

இருத்தல் இல்லாதிருத்தல் ஆகியவற்றுக்கு
இடையிலானதும்
ஒளிகளுக்கெல்லாம் ஒளியும் ஆன
நித்தியமான
ஆன்மாவை நாம் தியானம் செய்கிறோம்.

### எட்டு

நமது எல்லா எண்ணங்களுக்கும் பலனளிப்பவர்,
ஒளிப்பொருள்கள் அத்தனைக்கும் ஒளி அளிப்பவர்,
எல்லாப் பொருள்களுக்கும்
ஆகத்தீர்த்த வரம்பாக இருப்பவர்,
உணர்வு என்னும் ஆன்மா
ஆகிய தன்னைத் தியானம் செய்கிறோம்.

ஒன்பது

பார்ப்பானுக்கும் பார்க்கப்படு பொருளுக்கும் இடையே
ஏற்படுகின்ற அணுக்கத் தொடர்பினுல்
மனத்தில் எழும் இன்பமே
நமது மெய்த்தன்மை; அதாவது மாறுதலற்ற ஆன்மா.
அதை நாம் தியானம் செய்கிறோம்.

பத்து

விழிப்பு நிலையின் முடிவிலும்
உறக்க நிலையின் தொடக்கத்திலும்
ஏற்படுகிற நிலையை ஒருவன் இடையருது நினைப்பின்
அவன் அக்கணமே
அழிவற்ற ஆனத்தத்தை எய்தக் கூடும்.

பதினென்று

எந்த நிலை எண்ணங்களெல்லாம்
அமைதியுறுகின்றனவோ
எந்த நிலை விழிப்புக்கும் கனவுக்கும்
வேறுபட்டிருக்கின்றதோ
அத்தகைய, பாறைபோன்ற, திட்ப நிலையே
ஒருவனின் மேலாம் நிலையாகும்.

பன்னிரண்டு

'உண்மை-உணர்வு-ஆனந்தம்' ஆகிய
தேவ தேவன்
மண் குடத்திலிருக்கின்ற மண்ணைப் போல
எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான்.

பதின் மூன்று

எண்ணங்களால் அலைப்புறுகின்ற
எல்லையற்ற உணர்வுக் கடலாகிய ஆன்மா
தன் ஒளி வீசித் திகழ்கின்றது.

பதினான்கு

கடல் என்பது நீர் அன்றி வேறின்மை போல
பொருள் மலிந்த இவ்வுலகம்
உணர்வு அன்றி வேறொன்று இல்லை.
வரம்பிகந்த வெளிபோன்று
அஃது எங்கும் நிறைந்திருக்கின்றது.

பதினைந்து

கண்ணுக்குப் புலனாகாது இருப்பதிலும்,
எங்கும் பரவி இருப்பதிலும்,
அழிக்க முடியாத் தன்மையிலும்
பிரம்மமும் பரவெளியும் ஒன்றுதான்,
ஆனால் பிரம்மமோ உணர்வு மயமானது.

பதினாறு

அலைகளற்ற, ஆழமுள்ள, தூய
அமுதக் கடல் ஒன்றே ஒன்றுதான் உளது;
அஃது யாண்டும் இனியது,
யாண்டும் இனியது.

பதினேழு

இவை யாவும் உண்மையிலே பிரம்மம் தான்;
இவை யாவும் ஆன்மா,
''நான் ஒரு பொருள், இது வேறொரு பொருள்''
என்று பிரம்மத்தைத் துண்டு துண்டாக்காதே.

பதினெட்டு

பிரம்மம் எங்கும் பரவியுள்ளது, பிரிவற்றது என்று
உணருங்கால் இந்தப் பரந்த உலகியற் பற்று
(சமுசார பந்தம்) மேலாம் இறைவனாகவே காணப்படுகிறது.

பத்தொன்பது

எல்லாம் பிரம்மம் என்பதை உணருங்கால்
ஒருவன் உண்மையாகவே
தானும் பிரம்மம் ஆகிருன்.
அமுதத்தை அருந்தும் எவன்தான் அமரனுக மாட்டான்?

இருபது

நீ அறிவுள்ளவனுக இருப்பாயாகில்
இத்தகைய உறுதியினுல்
நீயும் பிரம்மம் ஆகுவாய்.
அங்ஙனம் இல்லையாகில்
உனக்குத் திரும்பத் திரும்ப உரைத்தாலும்
சாம்பல் மீது எறியப்பெற்ற படையல்கள் போல
அவ்வறிவுரை வீணுய் முடியும்.

இருபத்தொன்று

உண்மையை அறிந்திருப்பினும் நீ
மீண்டும் மீண்டும் பயில்தல் வேண்டும்.
கடக விதை (தேற்ருங் கொட்டை) என்று
வாயாற் சொல்லுவதனுல் மட்டும் தண்ணீர்
தெளிவடைந்து விடாது.

இருபத்திரண்டு

நான் தான் மேலான ஆன்மா, அழிவற்ற வாசுதேவன்
என்னும் எண்ணம்
ஒருவனுடைய மனத்தில் நிலை நிற்குமானுல்
அவன் விடுதலை அடைகிருன்;
இன்றேல் கட்டுண்டு கிடைக்கிருன்.

### இருபத்துமூன்று

'இது வன்று', 'இது வன்று' என்று
எல்லாவற்றையும் விலக்கிய பிறகு
அவ்வாறு விலக்கப்பட முடியாது எஞ்சி நிற்பது
மேலாம் இறையே.
அது நான் என்று நினைத்து மகிழ்ந்திரு,
மகிழ்ந்திரு.

### இருபத்து நான்கு

'நான் தான் பிரம்மம்' என்பதை
எப்பொழுதும் அறிந்துகொள்.
அது ஒன்றாக, முழுமையாக, இருக்கின்றது.
பிரிக்க இயலாத அந்தப் பொருளை—
—'நான் தியானிப்பவன், அது தியானப் பொருள்'
என்று எவ்வாறு பிரிக்க இயலும்?

### இருபத்தைந்து

நான் தூய உணர்வு என்பதைச் சிந்திக்கும் பொழுது
அது தியானம் எனப்படும்;
தியானம் என்ற எண்ணத்தையும் மறந்த நிலையில்
அது சமாதி எனப்படுகிறது.

### இருபத்தாறு

ஞான நெறியிற் கடுமையான பயிற்சி காரணமாக
'நான்' எனும் எண்ணம் அறவே நீங்கி,
பிரம்மத்தைப் பற்றிய எண்ணங்கள்
ஒருவனுடைய உள்ளத்தில் எக்காலமும்
பாய்ந்தோடிக் கொண்டிருக்குமானால்
அந்த நிலைக்கு எண்ணங்களற்ற தியானம்
(சாம்பிரக்ஞயாதா சமாதி) என்று பெயர்.

## இருபத்தேழு

யுகங்களின் முடிவில் தோன்றும் ஊழிக் காற்று
வீசினும் வீசுக;
கடல்கள் யாவும் ஒன்றுபடினும் படுக;
பன்னிரு பகலவரும் ஒருங்கு சேர்ந்து காயினும் காய்க;
எவ்வாருயினும்
மனமிறந்த நிலே எய்தப் பெற்ருனுக்கு
எவ்வித இடுக்கணும் வராது.

## இருபத்தெட்டு

எல்லா உயிர்களின் தோற்றத்திற்கும் மறைப்பிற்கும்
சாட்சியாக இருக்கின்ற உணர்வு எதுவோ,
அதுவே,
விழுமிய ஆனந்தமான அமரநிலே என்றுணருக.

## இருபத்தொன்பது

அசையும் பொருள் அசையாப் பொருள்
எதுவாக இருப்பினும்
அது மனத்தின் கற்பிதமே.
மனம் அழிக்கப்பட்ட நிலேயில்
இருமையோ பன்மையோ காணப்படுவதில்லே,

## முப்பது

எது மாறுதலற்றதோ, எது நலம் தருவதோ,
எது அமைதியானதோ
எதனில் இவ்வுலகம் தங்கியுள்ளதோ
எது மாறும் பொருள்களாகவும்
மாருப் பொருள்களாகவும் வெளிப்படுகின்றதோ
அதுவே, ஒன்றே ஒன்ருன உணர்வு ஆகும்.

முப்பத்தொன்று

பாம்பு தன் தோலை உரிப்பதற்கு முன்பு
அத் தோலையும் தான் என்றே கருதுகிறது.
தன் தோலைத் தனது புற்றில் உரித்த பிறகு
அதனைத் தான் என்று அது கருதுவதில்லை.

முப்பத்திரண்டு

நன்மை தீமை ஆகிய இரண்டையும் கடந்த ஒருவன்
சின்ன குழந்தை போல்கிறுன்.
பாவகாரியம் என்று விலக்கப் பட்டதை
அவன் செய்யாதிருப்பதில்லை.
தகுதி என்பதற்காக, விதிக்கப் பட்டதை
அவன் செய்வது மில்லை.
○ பாவ புண்ணிய வரையறைக்கு அவன் உட்பட்டதில்லை.

முப்பத்துமூன்று

சிலை ஒன்று தூணிலேயே செதுக்கப்பட்டிருத்தல் போல்
இந்த உலகம் பிரம்மத்தில் தங்கியிருக்கின்றது.
ஆகவே அந்தப் பரநிலை சூனிய நிலை யில்லை.

முப்பத்துநான்கு

சிலை எதுவும் இல்லாத போது அது
சிலையற்ற தூண் என்று சொல்லப்படுவது போல்
உலகம் என்ற தடம் இல்லாத போது
பிரம்மமும் வெறுவெளி எனப்படுகிறது.

முப்பத்தைந்து

நீரின் மேற்பரப்பு அலைகளோ டிருக்கலாம்
அலைகள் இல்லாமலும் இருக்கலாம்,
அதே போன்று பிரம்மமும்
உலகத்தைக் கொண்டிருக்கலாம் கொள்ளாமலும் இருக்கலாம்
அது இன்மையும் இல்லை; இருத்தலும் இல்லை. ○

# வசிட்டர் சொன்ன அறிவுரைகள்

ஆரார்

'ஒவ்வொன்றும் மாறுகிறது, ஒவ்வொன்றும் நிலையற்று இருக்கிறது' என்று அண்மையில் குறிப்பிட்டார் ரஷியத் தலைவர் கொர்பசேவ்.

'மாறுதன என்று நாம் கருதும் பரிதியும் விண்மீன்களும், கோள்களும் மாறிவருகின்றன' என்று எழுதுகிறார் அறிஞர் ஹாரி மில்லர்.

நில்லாதவற்றுள் நிலையானது, நம்மை விட்டுப் பிரியாதது, என்றென்றும் அறிவும் அமைதியும் தருவது, இன்பமே இயல்பானது - அது இன்னது என்று உணர்த்துகிறது வசிட்டரின் அறிவுரை.

இது அறிவரங்க வெளியீடு